REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ 'PHONE: 5563

# நம் நாடு

தி.மு.க. தினஇதழ் ஆசிரியர்.. அண்ணுதுரை

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 2] சென்னை: மார்கழி 17உ சனி (1—1—55) ★ ★ வெளியூர்: மார்கழி 18உ ஞாயிறு (2—1—55) [இதழ் 173

## பர்மாவில் வெள்ளை யானை

ரங்கூன், டிச. 30—

பர்மாவில் உள்ள பீ எனும் நதிக்கரையில் வெள்ளை யானை ஒன்று காணப்பட்டதாகச் செய்திகள் வந்துள்ளன.

பர்மிய பாரம்பரிய வழக்கப்படி இந்த யானை 'உலக அரசன்' எனுவதற்கானது என்று கூறப்படுகிறது.

மேலும், வெள்ளை யானைத் தோற்றம், பர்மாவின் முன்னேற்றத்திற்கும் வளத்திற்கும் அறிகுறி என்றும் சொல்லப்படுகிறதாம்.

பீ நதிக்கரையோரத்தில் வாழும் பலர் இந்த வெள்ளை யானையைக் கண்டனராம் சமீபத்தில்.

கரேன்களில் பிரபலமான வேட்டையாடுபவரான சாபி என்பவர் இந்த யானையைப் பிடிக்க ஏற்பாடுகள் செய்து வருகிறாராம்.

புத்த காலத்திற்கு முன்பு, தெலிங்கு பிரதேசத்தில் ஒரு வெள்ளை யானையை கரேன்கள் பிடித்தனர். அந்த யானை உலக முழுவதும் சுற்றிக் காண்பிக்கப்பட்டுவிட்டு, கல்கத்தாவில் உள்ள மிருகக் காட்சிசாலையிலிருக்கையில் அதைப் பார்க்க வந்த சிலர் தந்த அதிகக் கனிந்த வாழைப் பழங்களைத் தின்றதால் செத்து மடிந்தது.

# சேலம் இரும்பு: ரூ. 2 கோடி செலவில் திட்டம்?

## அதுவும் இப்பொழுது இல்லையாம்!

### பத்ராவதி உருக்குத் தொழிற்சாலை உருப்படாததாம்!

### தனது முன் கூற்றுக்கு டி. டி. கி. ஆச்சாரியின் புதிய விளக்கம்

"அனுதாபம் எப்பொழுதும் இரும்பை உற்பத்தி செய்யாது. சேலத்தில் மட்ட ரக இரும்புச் சுரங்கமும், சான்டூரில் உயர்ந்த ரக இரும்புச் சுரங்கமும் இருக்கின்றன என்பதில் ஐயமில்லை. ஆனால் இங்கு நிலக்கரி கிடையாது.

"பத்ராவதியில், காட்டுக்கரியைப் பயன்படுத்தி உருக்குத் தொழிற்சாலை ஒன்று துவங்கப்பட்டு உருக்கு தயாரிக்கப்பட்டு வருகிறது. இன்று, அங்கு உருக்குத் தொழில் தொடர்ந்து நடைபெற்று வருவதற்காக, உற்பத்தி செய்யப்படும் ஒவ்வொரு டன் உருக்கிற்கும் ரூ. 100 வீதம் உதவித் தொகை தரப்படுகிறது. அதாவது, மொத்த உற்பத்திச் செலவில் 25 சதவிகிதம் உதவித் தொகை தரப்படுகிறது. அவ்வுருக்கை முடிவாக உபயோகிக்கும் மக்களும் வரி செலுத்துவோரும் மேற்படி தொழிலை சிக்கனமானதாக ஆக்க, ஏறத்தாழ ரூ. 6 கோடி வரையில் செலுத்தி வருகிறார்கள். நாடு முழுதும் பத்ராவதியை நிறுவ முடியாது.

"சேலத்தில் உருக்குத் தொழிலை மேற்கொள்ள வேண்டுமானால், அதற்குத் தேவைப்படும் நிலக்கரியை சிங்ரேணி அல்லது ஜாரியாவிலிருந்தாவது சேலத்திற்கு கொண்டுவரவேண்டும். டன் ஒன்றுக்கு சுமார் ரூ. 42 கொடுத்து நிலக்கரியை வாங்கியாக வேண்டும். இப்படிச் செய்தபோதிலும், பத்திராவதியில் உற்பத்தியாகும் உருக்கிற்கு செலவாவதைக்காட்டிலும் இதன் செலவு கூடுதலாக இருக்கும்."

"புதிய தொழில் நுணுக்கங்களையும், புதிய பரீட்சார்த்த முறைகளையும் மேற்கொண்டு பயன்படு உலோகப் பொருட்களாக, சேலத்தில் கிடைக்கும் மட்டரக இரும்பை தொழிற்படுத்துவது என்பது வேறு விஷயம். அத்தகு தொழில் ஏற்பாட்டிற்கு ரூ. 2 கோடி மூலதனம் தேவைப்படுகிறது."

சேலத்தில் இரும்புத் தொழிற்சாலை ஒன்றை நிறுவுவது பற்றி தாங்கள் சில நாட்களுக்கு முன் கூறிய தகவல், அது விஷயத்தில் தங்களுக்குள்ள அனுதாபமற்றத் தன்மையைக் காட்டுவதாகக் குறை சொல்லப்படுகிறதே, அதற்குத் தங்கள் பதில் என்ன என்றும், அதற்கு மேலும் விளக்கிக் கூறவேண்டுமென்றும் பத்திரிகை நிருபர்கள், தொழில், வர்த்தக மந்திரி டி. டி கிருஷ்ணமாச்சாரியாரை 31-12-54 மாலையில் அவர் வீட்டில் சந்தித்துக் கேட்டனர். அதுபொழுது மேற்கூறிய விளக்கத்தை அமைச்சர் கூறினார். அவர் மேலும் அதுபற்றி கூறியதாவது:-

நெய்வேலியில் கிடைக்கும் லிக்னைட் (பழுப்பு நிலக்கரி) இவ்விஷயத்தில் துணை செய்யாதா?

லிக்னைட் 'பரீட்சார்த்த நிலை'யில் இருக்கிறது. அதைத் தோண்டி எடுத்தால், அங்குள்ள நீர் ஆகிய பிரச்சினைகளை சமாளிக்க வேண்டி இருக்கிறது. அதன் பின்னர், அதிலுள்ள செலவை கருதவேண்டியதாகிறது. லிக்னைட்டிலுள்ள எரி பகுதியை உருண்டைகளாக உருவாக்கி, அவைகளைப் பயன்படுத்துவது என்பது நிலக்கரியை உபயோகிப்பதைவிட இலாபகரமானதா எனச் சிந்திக்க வேண்டும். இலாபகரமானதுதான் என ஏற்படுமானல், அந்நிலையில் ரூ. 2 கோடி மூலதனத்தில் ஒரு தொழிற்சாலையை நிறுவ நம்பிக்கையாக முயற்சிக்கலாம். 'அதை விடுத்து, ஜாம்ஷெட்பூர், பரன்பூர், ரூர்கேலா ஆகியவை போன்று சேலத்தை நினைத்துக் கொள்வதில் ஒரு பயனுமில்லை' இத்தகைய ஏற்பாட்டில் இணைந்துள்ள பொருளாதாரப் பிரச்சினை புறக்கணிக்கக் கூடியதன்று."

## எஃகு ரயில் பாலம் உடைந்தது

### 'உலக சமாதான'த்திற்கு ஆபத்து!

சூயஸ், டிச. 31—

சூயஸ் கால்வாயில், 'உலக சமாதானம்' என்ற பெயருடைய கப்பலொன்று விபத்துக்குள்ளாகியது. கடலின்மேல் போடப்பட்டிருந்த எஃகு ரயில் பாலம் உடைந்து அக்கப்பல் மேல் விழுந்து பலத்த சேதம் விளைவித்ததாகக் கூறப்படுகிறது. இத்தகைய கோரவிபத்து வேறு எந்த ஜலசந்தியிலும் இதுவரை நடைபெற்றது கிடையாதாம்!

## ஆந்திராவில் உள்ள தமிழ் மாணவர்கள்

### சலுகைகளை நீடிக்க சர்க்கார் இணங்கினர்

சென்னை, டிச. 31—

ஆந்திர கல்வி நிலையங்களில் உள்ள தமிழ் மாணவர்களுக்கு அளிக்கப்படும் சலுகைகளை நீடிப்பதென்று ஆந்திர சர்க்கார் முடிவு செய்திருக்கிறது. இரு சர்க்காருக்கும் இடையே இறுதி முடிவு ஏற்படும்வரை இப்போதைய சலுகைகள் நீடிக்கும்.

இப்பிரச்சினையில், இரு சர்க்காருக்கு மிடையே முடிவு ஏற்படுவது மிகவும் சுலபமானதே என்று, சென்னை சர்க்காரின் பத்திரிகைக் குறிப்பொன்று கூறுகிறது.

திருத்தணி ஆசிரியர் பயிற்சிப் பள்ளி, அனந்தப்பூர் பொறி இயல் கல்லூரி ஆகிய நிலையங்களில் உள்ள தமிழ் மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் போன்ற சலுகைகளை ஆந்திர சர்க்கார் நிறுத்தியதும் இப்பிரச்சினை பற்றி சட்டசபையில் கேள்வி கேட்கப்பட்டதையும் பொதுமக்கள் அறிவார்கள்.

## நேரு - முகமது அலி சந்திப்பு

### மூன்று மாதத்திற்குள் நிகழும்

சிங்கப்பூர்—

காஷ்மீர் பிரச்சினை சம்மந்தமாக, இந்தியப் பிரதமர் நேருவுடன் அடுத்த மார்ச்சு திங்கள் முதல் வாரத்தில் புதுப் பேச்சு வார்த்தைகள் நடத்தப் போவதாகவும், அப்பேச்சு வார்த்தைகள் கராச்சியிலேயே நடைபெறலாமென்றும் பாகிஸ்தான் பிரதமர் முகமதலி கூறியுள்ளார்.

மேலும் அவர், எப்படியும் இப்பிரச்சினை தீர்ந்துவிடுமென்று தாம் எப்போதுமே நம்பிக்கொண்டிருப்பதாகவும், இப்பிரச்சினை காரணமாகவே இரு நாடுகளுக்கும் கஷ்டங்கள் ஏற்படுகின்றன என்றும், இப்பிரச்சினையில் நல்லதோர் முடிவைக் காணும் சமயம் கிட்டத்தட்ட நெருங்கிவிட்டதென்றும் கூறியிருக்கிறார்.

## புத்த பிட்சு கொலை

### பயங்கரவாதிகள் செயல்

இரங்கூன், டிச. 31—

மத்திய பர்மாவைச் சேர்ந்த டாங்வின்கி என்னுமிடத்தில் புத்தபிட்சு ஒருவர் குத்திக் கொலை செய்யப்பட்டாராம்.

72 வயதான அவர், கொலை செய்யப்படுகையில், தியானத்தில் ஆழ்ந்திருந்தாராம்!

ஆலயத்தில் உள்ள பணம், விலை உயர்ந்த பொருள்கள் அனைத்தையும் தங்களிடம் கொடுக்குமாறு 6 பயங்கரவாதிகள் புத்த பிட்சுவைக் கேட்டனர் என்றும், அவர் மறுக்கவே அவரைக் குத்திக் கொலை செய்துவிட்டனர் என்றும் சொல்லப்படுகிறது.

## எகிப்து நீதிமன்றத்தில் எதிர்ப்பு கோஷம்

### வழக்கறிஞர்கள் உட்பட 36 பேருக்கு சிறை!

கெய்ரோ, டிச. 31—

"எகிப்தின் பாசிச இராணுவ ஆட்சி ஒழிக! மேற்கத்திய ஏகாதிபத்தியத்திற்கு எதிராக சோவியத்துடன் நாங்கள் சுதந்திரத்திற்கு உழைப்போம்!" என்று இங்குள்ள நீதி மன்றத்தில் எகிப்திய இளைஞர்கள் சிலர் கோஷமிட்டிருக்கின்றனர்.

இது சம்பந்தமாக, வழக்கறிஞர்கள், என்ஜினீயர்கள், மாணவர்கள், டாக்சி டிரைவர்கள் உட்பட 36 பேர் தண்டிக்கப்பட்டனர். கம்யூனிஸ்டுகளால் ஆதரிக்கப்படும் 'ஹதேடோ' என்னும் கட்சி ஒன்றையும் கலைக்குமாறு நீதி மன்றம் உத்தரவிட்டது.

கடந்த மே திங்களில் இவர்கள் எல்லாரும் நாசவேலை செய்தார்கள் என்று கைது செய்யப்பட்டார்கள்.

முஸ்லிம் சகோதர உறவுக் கழகத்தினர் இருவர் கடின உழைப்புடன் ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டனர்.

மற்றும் 124 பேர்களும் அதே நீதிமன்றத்தினுல் தண்டிக்கப்பட்டனர்.

52 பேர்களைப் பற்றிய தண்டனையை நிறுத்தி வைக்குமாறு நீதி மன்றம் உத்தரவிட்டது; அவர்கள் சர்க்காரைக் கவிழ்க்க சதி செய்தனர் என்று குற்றம் சாட்டப்பட்டனர்.

## புதுவை: சட்டபூர்வ அதிகார மாற்றம்

புதுடில்லி, டிச. 31—

இந்தியாவில் உள்ள முன்னுள் பிரெஞ்சுத் திட்டுக்களை இந்தியப் பேரரசிடம் சட்டபூர்வமாக ஒப்புவிப்பதற்கான பேச்சு வார்த்தைகள் இன்னும் இரண்டு மாதங்களுக்குள் துவங்கும் என்றும் அந்தக் காலத்திற்குள் புதுவையில் உள்ள இந்தோ-பிரெஞ்சுக் கூட்டுக்குழுக்கள் தங்கள் வேலைகளை முடித்துவிடக் கூடும் எனவும் தெரிகிறது.

## ஊர்வலத்தில் கைகலப்பு!

### போலீசார் கண்ணீர்ப்புகை பிரயோகம்

ஹுதியானுவில் சம்பவம்

ஹுதியானு, டிச. 31—

'மகா பஞ்சாப்' இயக்க ஆதரவாளர்களுக்கும் 'அகாலி'களுக்குமிடையில் ஏற்பட்ட கைகலப்பின்போது போலீசார் கண்ணீர்ப்புகைப் பிரயோகம் செய்திருக்கின்றனர் எனத் தெரியவருகிறது.

'சூரா பஜார்' என்ற ஹுதியானுவின் பிரதான வியாபாரப் பகுதியில் இக்கைகலப்பு நடைபெற்றதாம்.

சம்பவத்தையொட்டி மாலை 6 மணி முதல் 13 மணி நேரத்திற்கு 'கர்பியூ' உத்தரவும் பிறப்பிக்கப்பட்டுள்ளதாம்.

குரு கோவிந்த சிங் பிறந்த தின விழாவினையொட்டி, 'அகாலி'கள் ஒரு ஊர்வலம் நடத்தினர்.

'காஸ் மண்டி' என்ற இடத்திற்குச் சென்றதும் ஊர்வலத்தினர் அரசியல் கோஷங்களை எழுப்பினராம்.

உடனே, 'மகா பஞ்சாப்' இயக்க ஆதரவாளர்கள் எதிர்ப்பு கோஷங்களை எழுப்பியிருக்கின்றனர். இது இரண்டு கோஷ்டிகளிடையேயும் கைகலப்பு ஏற்படுவதில் கொண்டுவிட்டிருக்கிறது எனச் செய்திகள் கூறுகின்றன.

## பண்டிதரின் உறுதி

கோவா பிரச்சினையில் புதிய மாற்றங்கள் எதுவுமே கிடையாது என்றும், கோவா, எப்படியும் இந்திய யூனியனுடன் இணைக்கப்பட்டே தீரும் என்றும் பண்டித நேரு, பினங்கில் குறிப்பிட்டார்.

## மனைவி மக்களை அழைத்து கொள்ள முடியாது

### தென்னுப்பிரிக்க இந்தியருக்குக் கிடைத்துவந்த சலுகை ரத்து

★

பிரிடோரியா, டிச. 31—

தென்னுப்பிரிக்காவில் வாழும் இந்தியர்கள் இந்தியாவில் வாழும் தங்கள் மனைவி, மக்களை தென்னுப்பிரிக்காவிற்கு அழைத்துக்கொள்வதற்காக, ஸ்மட்ஸ்-காந்தியார் ஒப்பந்தப்படி இருந்துவந்த சலுகைகள் நாளை முதல் ரத்து செய்யப்பட்டிருப்பதாக அறியவருகிறது.

1953-ம் வருடத்திய, குடியேற்ற நிர்வாகத் திருத்தச் சட்டத்தின்கீழ் பிறப்பிக்கப்பட்ட உத்திரவில் அந்த சலுகைகள் 1955 ஜனவரி 1 முதல் ரத்து செய்யப்பட்டுள்ளன என்று தெரிகிறது.

# நம் நாடு



தி.மு.க.தின இதழ் ஆசிரியர்: அண்ணாதுரை

சென்னை 1—1—1955 சனி


# பாலாறு பாசனம்

நம் விவசாய வளர்ச்சிக்கு, வடாற்காடு-செங்கல்பட்டு மாவட்ட மக்கள் பெரிதும் பாலாற்று வெள்ளப்பெருக்கையே நம்பிக்கிடப்பவர்களாவர். பாலாற்றில் வெள்ளம் ஓடினுல், அதன் இரு கரைகளிலும் உள்ள நஞ்சை நிலங்கள் பச்சைப்பசேலெனக் காட்சி தரும் நிலையெய்தும். அக்காட்சி, அப்பகுதிகளிலுள்ள மக்களின் நல்வாழ்விற்கு ஒரு எடுத்துக்காட்டாகவும் விளங்கும். கூடுமானவரை வறுமை தொலைந்து, வேலையின்மை குறைந்து இருக்கும் நிலையும், அதனுல் ஏற்படுவது இயற்கையாகும்.

பாலாற்று நீரின் பெருமையையும், அதன் இரு கரைகளிலும் கண்ணுக்குக் குளிர்ச்சியாகக் காணப்பட்டுவந்த வயல்களின் தன்மையையும், அதன் விளைவாக அப்பகுதி பெற்றிருந்த செல்வச் சிறப்பையும் விளக்கிக் கூறின தமிழ்ப் பண்கள், தமிழ் நூற்களில் எராளமாக இருக்கின்றன. இந்நூற்களில் கூறப்பட்டுள்ள சிறப்புகள் அனைத்தையும், இன்று நாம் ஏட்டளவில்தான் காண முடிகிறதே அல்லாது, அப்பகுதிகளில் காண்பது அருபொருளாக ஆகிவிட்டது. தமிழ்ப் பண்களில் குறிப்பிடப்பட்டுள்ள அனைத்தும், வெறும் கவிகளின் கற்பனையோ என்று கூட நினைக்கவேண்டிய அளவில் இன்று அப்பகுதிகளின் தன்மை இருந்து வருகிறது.

தமிழில் கவிதை எழ உணர்வூட்டிய பாலாறு, இன்று வெறும் மணலாருக மாறிக் கிடக்கிறது. அதன் இரு கரைகளும் பொட்டல் காடாகச் சீரழிந்து கிடக்கின்றன. அங்குள்ள மக்களிடையிலும், வேலையின்மையும், பஞ்சமும், பட்டினியும் கோரத்தாண்டவம் புரிந்தவண்ணம் உள்ளன.

இச்சூழிய நிலை, செங்கல்பட்டு, வடாற்காடு மாவட்ட மக்களுக்கு இன்று நேற்று ஏற்பட்டதும் அல்ல. கடந்த ஐம்பது ஆண்டுகளுக்கு அதிகமாகவே இவ்வேதனைக்கு, மேற்படி இரண்டு மாவட்ட மக்களும் பலியாகியும், மீள வழிவகை தெரியாமலும் தவித்துக் கிடக்கின்றனர்.

ஏராது செல்வப் பெருக்கத்திற்குப் பெரிதும் பயிர்த்தொழிலை மட்டுமே சென்னை மாநிலம் நம்பிக்கிடக்கிறதென்றுல், அத்துறையில் முன்னணியில் இருப்பவை வடாற்காடு-செங்கல்பட்டு மாவட்டங்களாகும் என்பது மிகையாகாது. இவ்விரண்டு மாவட்டங்களிலும் உள்ள நீர் வசதியோ மிகமிகக் குறைவு. அதன் விளைவாக, அம்மாவட்டங்களின் விவசாயம் பெரும் அளவில் வானம் பார்த்த ஒன்ருகவும், குறைந்த அளவில் இருந்துவரும் நீர்நிலைகளை நம்பியும் நடைபெற்று வருவதாக உள்ளது. இத்தகைய வசதிக் குறைவில், பாலாறு வேறு பாலைவனமாக மாற்றப்பட்டுக்கிடக்கிறது என்றுல், அம்மாவட்ட மக்கள் அனுபவித்துவரும் துன்பம் எத்தகையதாக இருக்கும் என்பதை நாம் விளக்காமலே, அனைவராலும் புரிந்துகொள்ள முடியும்.

மைசூர் பகுதியில் பாலாறு உற்பத்தியாகிறது. உற்பத்தி இடத்திலிருந்து ஐம்பது மைல் வரையில் மைசூர் மாநிலத்தில் பாலாறு செல்லுகிறது. அதன் பிறகே, வடாற்காட்டில் அவ்வாறு நுழைகிறது. அப்பாலாற்றில் புரண்டு வரும் நீரினுல் மைசூர் மாநிலத்தில் 1,500 ஏரிகள் வரை நிரம்பப் பெறுகின்றன. அவ்வேரிகள் நிரம்புவதின் நேரடி பலனுகத்தான், வடாற்காடு செங்கற்பட்டு மாவட்டத்தில் இருந்துவரும் பாலாறு வெறும் மணலாருக மாறிப்போயிருக்கிறது. மீண்டும் பாலாறு முன்னுள் உயர்ந்த நிலையைப் பெறுவதும், பெருமற்போவதும் மைசூர் அரசாங்கத்தின் தாராள புத்தியையே பொறுத்துள்ளது.

பாலாற்றின் நீரை பயன்படுத்துவது குறித்து சென்னை அரசாங்கத்திற்கும், மைசூர் அரசாங்கத்திற்கும் ஒரு உடன்படிக்கை ஏற்பட்டது. அந்த உடன்பாட்டில் மைசூர் பெற்ற சலுகையின் காரணமாகத்தான், பாலாற்றைப் பாழாருக அடிக்கும் உரிமையும், துணிவும் மைசூர் அரசாங்கத்திற்குக் கிடைத்துள்ளன.

1892-ம் ஆண்டு செய்து கொள்ளப்பட்ட உடன்படிக்கை விதிகளுக்கு மாருக, மைசூரில் உள்ள பெத்தமங்கலம் ஏரிக்கரையை, உடன்படிக்கையில் கூறப்பட்டுள்ள ஒன்பது அடி உயரத்துக்கு மாருக பதினெட்டு அடி உயரத்திற்கு உயர்த்திவிட்டிருக்கிறது; வடாற்காட்டை அடுத்து மைசூர் எல்லையோரத்தில் உள்ள இராமபாதசாகர் ஏரிக்கரையை ஏற்கனவே இருந்து வந்ததற்குக் கூடுதலாக உயர்த்திவிட்டிருக்கிறது; ஆகிய இவ்விரண்டு முக்கிய செய்கைகளால் பாலாறு பாழடைந்து போகவும், இரு மாவட்ட பயிர்த் தொழில் நாசமாகிக் கிடக்கவுமான நிலை இருக்கிறது என்று, மைசூர் அரசாங்கத்தின் மீது குறை கூறப்படுகிறது. இக்குற்றச்சாட்டு நியாயமானதாகத்தான் இருக்குமென்பதை, வறண்டு கிடக்கும் பாலாறு உறுதி செய்த வண்ணம் உள்ளது.

1929-ல், வடாற்காடு-செங்கல்பட்டு மாவட்டங்களின் சார்பில் தேர்ந்தெடுக்கப்பட்ட சென்னை சட்ட சபை உறுப்பினர்கள், இப்பிரச்சினையில் கருத்துச் செலுத்துமாறு அன்றிருந்த சென்னை அரசாங்கத்தை வற்புறுத்தினர். அன்று முதல் இப்பிரச்சினையை நல்ல முறையில் தீர்த்துவைக்குமாறு, அதன் பிறகு தேர்ந்தெடுக்கப்பட்ட அம்மாவட்டங்களின் சட்டசபை உறுப்பினர்கள் சென்னை அரசாங்கத்தை நெருக்கியேவந்துள்ளனர். இவ்வளவும் இன்றுவரை கோரிய பயனைக் கொடுக்காமலே இருந்து வந்துள்ளன.

இப்பாலாறு பிரச்சினையை, வடாற்காடு—செங்கல்பட்டு மக்களுக்கு பயன்தரும் வகையில் தீர்க்க முயற்சி எடுத்துக்கொள்வதாகத் தேர்தலில் வாக்களித்தே, மக்களின் ஆதரவைப் பெற்று தேர்தல் காலத்து 'காமன்வில்' கட்சியின் தலைவரான நிலவரி அமைச்சர் கனம் மாணிக்கவேலர், கனமாகும் வாய்ப்புப் பெற்றிருக்கிருர் என்றே நாம் நினைக்கிரோம். தேர்தல் காலத்தில், தான் கொடுத்த வாக்குறுதிகளை எல்லாம் அவர் செய்யத் தவறிவிடுவாராஞலும், பாலாற்றில் மீண்டும் வெள்ளமோட முயற்சிப்பதாகக் கூறியதையாவது கனம் மாணிக்கவேலர் வெற்றிகரமாக முடிப்பார் என்றே நம்புகிரோம்.

1892-ல் ஏற்பட்ட உடன்படிக்கை விதிகளுக்கு மாருக மைசூர் அரசாங்கம் நடந்துகொண்டு இருப்பதாகக் கூறப்படும் குற்றச்சாட்டு பற்ற, விளக்கம் கூறுமாறு மைசூர் அரசாங்கத்தைச் சென்னை அரசாங்கம் கேட்டதாகவும், அம்முயற்சியில் இதுவரை வெற்றி ஏற்படவில்லை எனவும், இந்தியப் பேரரசின் தலையீட்டால் தான் ஏதாவது பலன் கிடைக்கக்கூடுமென விவசாயிகள் எண்ணுகிருர்கள் எனவும், கனம் மாணிக்கவேலர், பத்திரிகை நிருபர்களிடம் கூறியுள்ளார். அதுவுமன்றி, சில காலத்திற்குமுன் அப்பகுதி விவசாயிகள் சென்னை அரசாங்கத்திடம், பாலாறு பாசன வசதி குறித்து செய்துகொண்ட முறையீடு, அரசாங்கத்தால் தீவிரமாக ஆராயப்படுகிறது எனவும் அமைச்சர் அறிவித்துள்ளார்.

சென்ற வாரத்தில் காவேரிப்பாக்கத்தில் இப்பிரச்சினை குறித்து மாநாடு ஒன்றும் நடைபெற்றிருக்கிறது. மாநாட்டு முடிவுகளை வெற்றிகரமாக நிறைவேற்றி வைக்க ஒரு செயற் குழுவும் உருவாக்கப்பட்டிருக்கிறது. அச்செயற்குழுவும், கனம் அமைச்சரைத் தூங்கவிடாமல் துளைத்துக் கொண்டே இருக்க வேண்டும். அப்பொழுதுதான் நீர் ஓடும் பாலாற்றைப் பார்க்கும் பேறு, இரண்டொரு ஆண்டுக்குள் நமக்குக் கிடைக்கக்கூடும்.

## வயிற்றினுள் 2,000 பூச்சிகள்!

### ஆபரேஷன் செய்து எடுக்கப்பட்டன

ஆலப்புழையிலுள்ள (திரு — கொ.) சர்க்கார் மருத்துவ மனையில் ஒரு நோயாளியின் வயிற்றை 'ஆபரேஷன்' செய்து பார்த்ததில், அவரது குடலில் நாக்குப்பூச்சியின் வகையைச் சேர்ந்த 'ரவுண்ட வொர்ம்ஸ்' எனப்படும் 2,000-புழுக்கள் காணப்பட்டனவாம்!

இந்தப் புழுக்கள் ஒவ்வொன்றும் 8 முதல் 10 அங்குலம் நீளமுள்ளவையாக இருந்தனவாம்!

நோயாளியின் வயிற்றை 'ஆபரேஷன்' செய்த மருத்துவர் இது பற்றிக் குறிப்பிடுகையில், அந்தப் புழுக்கள் எல்லாம், நோயாளியின் சிறு குடலுக்குள் புகுந்துகொள்ளும் தருவாயிலிருந்தன வென்றும், அப்படி அவைகளெல்லாம் சிறு குடலுக்குள் சென்றிருந்தால், உயிருக்கே ஆபத்தை விளைவித்திருக்குமெனவும் குறிப்பிட்டுள்ளார். இதுவரை எவர் வயிற்றிலும் இத்தனை பூச்சிகள் இருந்ததில்லையாம்.

## சீன விவசாயிகள் நிலங்களை இழப்பர்

### சோவியத் கூட்டுப்பண்ணை அமுல் நடத்தப்படும்

சீனுவில் இப்போது விவசாயிகள் தங்களுக்கென்று வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்ட சிறுநிலப் பகுதிகளையும் சர்க்கார் எடுத்துக்கொள்ள இருக்கிறதாம்.

1950-ம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட விவசாய சீர்திருத்தச் சட்டம் விவசாயிகளுக்கு சிறு நிலங்களை வைத்துக் கொள்ள அனுமதியளித்தது.

சீனுவின் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் (1958-62)படி, கூட்டுப்பண்ணை முறையே எங்கும் அமுல் செய்யப்படும் என்று தெரிகிறது.

சீன உதவிப் பிரதமரான டெங்-டிங்-ஹூய் விடுத்துள்ள அறிக்கை ஒன்று இச்செய்தியைக் கூறுகிறது.

சர்க்கார் நிலங்களில் விவசாயிகள் உழைக்கும் சோவியத் முறையான கூட்டுப்பண்ணை முறையை 1958ல், சீன, பூராவாக அமுல் செய்யும் என்று அவர் மேலும் கூறியுள்ளார்.

1950-ம் ஆண்டில் வெளியிடப்பட்ட நிலச்சீர்திருத்த கொள்கைக்கு இது நேர் எதிரிடையான கொள்கையாகும்.

நிலப் பிரபுக்களின் முறை ஒழிக்கப்பட்டு, விவசாயிகளுக்கு நிலம் சொந்தமாக்கப்படுவதுதான் 1950-ம் ஆண்டு கொள்கையாகும். அப்போது நிறைவேற்றப்பட்ட சட்டம், விவசாயிகள், தங்களுக்கென்று அளிக்கப்பட்ட நிலத்தை, தங்கள் விருப்பம்போல் பயன்படுத்தலாம் என்று அனுமதிக்கப்பட்டது.

கூட்டுப்பண்ணை முறையை திடீரென அமுல் செய்தால் நிலங்களை இழக்கும் மக்கள் புரட்சியில் இறங்கிவிடுவார்கள் என்று எண்ணி அப்படி நடைபெறுவதைத் தடுக்கவே சிறிது சிறிதாக சோவியத் முறையை பீகிங் சர்க்கார் கையாளுகிறது.

கூட்டு பண்ணை முறை என்பது பிரபுத்துவ முறையைப் போன்றதுதான் என்று பலர் கருதுகின்றனராம்.

பிரபுத்துவ முறையில் விவசாயிகளுக்கு நிலத்தின்மீது உரிமை இல்லை; கூலியை பிரபுவே நிர்ணயிக்கிருர். அதுபோலவே, கூட்டுப்பண்ணை முறையிலும், விவசாயிக்கு நிலத்தின்மீது உரிமை எதும் கிடையாது; விவசாயிகளுக்கான கூலியை சர்க்காரே நிர்ணயிக்கிறது என்று பலர் கருதுகின்றனர்.

தங்களிடம் இப்போது விட்டு வைக்கப்பட்டிருக்கும் சிறு நிலத்துண்டுகளையும் சர்க்கார் எடுத்துக்கொள்ளப் போகிறது என்று தெரிந்த விவசாயிகள், சர்க்காருக்கு எதிராக காரியமாற்ருது இருக்கவேண்டும் என்று பீகிங் சர்க்கார் மிகுந்த எச்சரிக்கையுடன் இருக்கிறது.

பீகிங் வானொலியும், பத்திரிகைகளும், 'விவசாயக் கூட்டுறவுப் பண்ணைகளைக் கலைப்பது, நாசப்படுத்துவது குற்றமாகும்,' என்று மக்களுக்கு அடிக்கடி நினைவுறுத்துகின்றன.

அதே நேரத்தில், 'கூட்டுறவுப் பண்ணைகளைப் பாதுகாப்பதுதான் நீதிமன்றங்களின் வேலை,' என்று நீதி இலாகாவினரிடம் கூறப்படுகிறது.

"நாடெங்கும் பரந்து கிடக்கும் விவசாயிகளிடையே சிக்கியிருக்கும் நிலங்களை மீட்டு, கூட்டுப்பண்ணை முறையை அமுல் செய்வதில் கட்சி ஊழியர்கள் விருப்புடன் இருக்கவேண்டும். தவறி நடப்பவர்கள் கடுமையாக தண்டிக்கப்படுவார்கள்,"

என்று, செப்டம்பர் திங்களில் பீகிங் வானொலி எச்சரிக்கை செய்ததாம்!

## அரிசி - ரப்பர் பண்ட மாற்று வாணிபம்

### பர்மா—இலங்கை முயற்சி

கொழும்பு, டிச. 30—

சீனுவுடன் இலங்கை ஒப்பந்தம் செய்துகொண்டுள்ளதைப்போல், பர்மா, இலங்கையின் ரப்பரைப் பெற்றுக்கொண்டு அரிசியைத் தரமுன்வந்திருக்கிறதாம். குறைந்த விலையில் அரிசியைத் தருவதாக பர்மா கூறுகிறதாம்.

இந்தோனேஷ்யாவில் நடைபெற்ற மாநாட்டில், பர்மா இலங்கையிடம் இதுபற்றி கூறியிருப்பதாகத் தெரிகிறது.

## நீதிமன்றத்தில் இந்தியின் நிலை

### சி. பி. இராமசாமி அய்யர் எச்சரிக்கை

"வழக்கறிஞர்கள் மொழிப் பித்தும், மாகாணப் பித்தும் கொண்டவர்களாக இருக்க முடியாது; இந்த நாடு தெளிவற்ற குழந்தை மனப்பான்மையிலிருந்து விடுபட வேண்டுமென்றுல், இது போன்ற பித்துக்களால் வழக்கறிஞர்கள் பீடிக்கப்படக் கூடாது,"

என்று, டாக்டர் சி. பி. இராமசாமி அய்யர், சென்னையில் நடைபெற்ற வழக்கறிஞர்கள் மாநாட்டில் பேசுகையில் குறிப்பிட்டார்.

"இந்திய அரசியல் சட்டம் குறிப்பிடுவதுபோல், 15 ஆண்டுகளில் நீதி மன்றங்களில் இந்தி மொழி அமுல் செய்யப்பட்டால், அது அபாயகரமான விளைவுகளை உண்டாக்கும்,"

என்று, அவர் குறிப்பிட்டுவிட்டு, தொடர்ந்து பேசியதாவது :—

"கல்வியிலும், நீதிமன்றத்திலும் ஆங்கிலத்தின் இடத்தைப் பிடிப்பதில் இந்தி தன்னைச் சரி செய்து கொள்ள வேண்டுமென்றுல், தத்துவம், சட்டம் ஆகியவற்றிற்கு இலக்கியங்கள் தயாராக வேண்டும். அவற்றைத் தயார் செய்ய நீண்டகாலம் பிடிக்கும்."

"15 ஆண்டுகளுக்குப் பின்னர், திடீரென நீதி மன்றங்களில், மொழி பெயர்ப்புகள், வாதங்கள், குறுக்கு விசாரணைகள் ஆகியவைகளை எப்படி இந்தியில் எடுத்துச் சொல்ல முடியும்?" என்று அவர் கேட்டார்.

"நீதி மன்றங்களில், ஆங்கிலம் வருவதற்கு முன்னர், அது எவ்வளவோ தொல்லைகளுக்கு உள்ளாயிற்று. ஆங்கிலம், நீதி மன்ற மொழியாவதற்கு நீண்ட காலம் பிடித்தது" என்று அவர் மேலும் கூறினர்.

"அவசரமில்லாத தன்மையும், தீவிர ஆராய்ச்சியும் இப்பிரச்சினையில் தேவை; இப்பிரச்சினையில், மாகாணப் பித்து கொள்வது, தீமையையே உண்டாக்கும்," என்று அவர் மேலும் குறிப்பிட்டார்.

## எம். என். ராய் வாழ்க்கை சரித்திரம்

### நேரு முன்னுரை எழுதுவார்

கல்கத்தா, டிச. 30—

இந்திய உபகண்டத்தின் சிறந்த சிந்தனையாளர்களில் ஒருவரான எம். என். ராயின் வாழ்க்கைச் சரித்திரம் சீக்கிரமே வெளியிடப்பட இருக்கிறது. இதற்கு பண்டித நேரு முன்னுரை எழுதுவார் என்று தெரிகிறது.

One side of the page is dark



# 'அணுகுண்டுகளைத் தயாரிப்போரே அவற்ருல் அழிய வேண்டும்'

## அமைதியாக வாழ்வோர் மீது தாக்குதல் ஏன்?

### டாக்டர் சி.வி. ராமன் கேள்வி

அணுகுண்டு போன்ற பயங்கர ஆயுதங்களைக் குவிப்போர் மீது டாக்டர் சி. வி. ராமன் பாய்ந்திருக்கிருர்.

ஹூப்ளியில் நடைபெற்ற பொதுக் கூட்டமொன்றில் பேசிய அவர், "அணுகுண்டு தயாரிப்பவர்கள் தங்களைத் தாங்களே அக்குண்டுகளால் அழித்துக் கொண்டு தொலையட்டுமே! ஏன் சமாதானமாக வாழும் நாடுகளையும் அக்குண்டுகளின் தாக்குதல்களுக்கு ஆளாக்குகிருர்களோ தெரியவில்லை" என்று சீறியிருக்கிருர்.

மேலும் அவர் சொன்னுர் :—

"அணுகுண்டு, நீர்வளிக்குண்டு போன்றவைகளின் எண்ணிக்கை பெருகுவதற்குக் காரணமாக விஞ்ஞானத்தைக் குறைகூறக் கூடாது; விஞ்ஞானம் அழிவுச் சக்தியையும், ஆக்க சக்தியையும் உடையது; ஆனுல், அந்த விஞ்ஞானத்தை அழிவு வேலைகளுக்குப் பயன்படுத்துவோரே குற்றவாளிகளாவர்."

"அணுசக்தி உற்பத்தி சமாதான காரியங்களுக்காக நடைபெறுவதாகக் கூறுகிருர்கள்; 100 டாலர்கள், அணுசக்தி உற்பத்திக்காகச் செலவழிக்கப்பட்டால், அதில் 99·99 டாலர் அழிவு வேலைக்கே செலவிடப்படுகிறது. 0·01 டாலர் மட்டுமே ஆக்க வேலைக்குப் பயன்படுத்தப்படுகிறது."

"விஞ்ஞானம் கட்டவிழ்த்துவிட்டுள்ள இந்த அணுசக்தி, உலகத்தையே விழுங்கிவிடுமோ என நான் அஞ்சுகிறேன்."

"அணுகுண்டுகளை தயாரித்து வைத்திருக்கிற நாடுகள் ஒன்றின்மீது ஒன்று அவற்றை விசிக்கொண்டு விழ்ந்து செத்து மடியட்டும்; மாஸ்கோவோ, சிகாகோவோ சாம்பலாவதைப் பற்றி நான் கவலைப்படவில்லை; ஆனுல், அமைதியாக வாழ் விரும்பும் நாடுகள் மீதும் அந்தத் தாக்குதல்களை நடத்துவானேன்?"

"இந்தியர்களாகிய நாம் சமாதானமாக அமைதியுடன் வாழ விரும்புகிரோம்; நாம், நமக்காக இருக்க வேண்டுமென ஆசைப்படுகிரோம்; நம்மை அணுகுண்டுத் தாக்குதலிலிருந்து ஆண்டவன்காப்பாற்ற வேண்டுமெனப் பிரார்த்திக்கிறேன்."

"காந்தியார் கூட இப்படிப் பேசமாட்டார்; ஆனுல் நான் என்ன உணர்கிறேனே அதைச் சொல்ல விரும்புகிறேன்; அப்படிச் சொல்வதினுல் வரும் விளைவுகளையும் அனுபவிக்கச் சித்தமாயிருக்கிறேன்," என்று குறிப்பிட்டார்.

## "மனிதவர்க்கமே அழிந்துவிடும்"

### அணுகுண்டு குறித்து பண்டித நேரு

ஜகார்தா, டிச. 31—

"அணுகுண்டுகளையும் நீர்வளிக் குண்டுகளையும் பரிசோதனைக்காக வெடிக்க வைப்பதால் உலகில் பேராபத்துகளும் தீமைகளும் எற்படும்;

"அணுவைப் பிளந்து விடுவதினுல் உலக முழுமையும் நாச கிரணங்கள் பரவி உலக மக்கள் எல்லோருக்குமே தொல்லைகளையும் துன்பத்தையும் விளைவிக்கும்,"

இவ்வாறு, ஜகார்தாவில், அணு, நீர்வளிக் குண்டுகள் பற்றிய தமது அபிப்பிராயத்தைக் கூறுகையில், உலக நாடுகளை எச்சரித்து, பண்டித நேரு நிருபர்களிடையே தெரிவித்தார்.

மேலும் அவர் கூறினர் :—

"சுமார் 6 அல்லது 7 அணுகுண்டுகளை மட்டும் வெடிக்க வைத்தால் போதும்—உலகின் வாயு மண்டலம் முழுவதுமே கொடிய விஷப்புகையும், அபாயகரமான கிரணங்களும் பரவி மக்களுக்குத் தீங்கை விளைவித்து விடும். இவ்வாறு அணுகுண்டுகளை வெடிக்க வைத்துக் கொண்டே சென்ருல், உலக முழுவதுக்குமே அபாயம் நேரிட்டுவிடக் கூடும். அது மட்டுமல்ல—மனித வர்க்கமே இல்லாமல் அழிக்கப்பட்டு விடும்."

இதனுல் சரித்திரத்தில், முதன் முதலாகப் போர் ஏற்படுவது சாத்தியமில்லாமல் போய் விடுகிறதென்று பொதுவாக முடிவு செய்துகொள்ளலாம் என்றும், ஆனுல், இந்த முடிவை உலக நாடுகளெல்லாம் ஏற்றுக்கொள்ளும் என்பது நிச்சயமில்லை என்றும் அவர் மேலும் கருத்தறிவித்திருக்கிருர்.

★

## "நாகரீகத்திற்கே நாசம் விளைவிக்கும்"

### அணுகுண்டு பரிசோதனை பற்றி ஆசியப்பிரதமர்கள் கூட்டறிக்கை

"அணுகுண்டு, நீர்வளிக்குண்டுகளின் பரிசோதனைகள் மனித உயிருக்கும், நாகரீகத்திற்கும் ஆபத்து விளைவிக்கக்கூடியவை; எனவே, அவற்றை நிறுத்த எல்லா நாடுகளும் பாடுபட வேண்டும். இந்தப் பிரச்னையை ஐ. நா. ஆயுதப் பரிகரணக் குழு ஆலோசித்து முடிவு கட்ட வேண்டும்."

இவ்வாறு, பாகாரில் கூடிப் பேசிய 5 ஆசிய நாடுகளின் பிரதமர்கள் வெளியிட்டுள்ள கூட்டறிக்கை ஒன்றில் குறிப்பிட்டிருக்கின்றனர்.

## மூன்று லட்சம் பாரசீக மலைவாசிகள்

### நிராயுதபாணியாக்கப்படுவர்!

தெற்கு பாரசீகப் பிரதேசத்தில் வாழும் மூன்று லட்சம் மலைவாசிகளை நிராயுதபாணியாக்கும் திட்டம் ஒன்று பாரசீக சர்க்காரால் சீக்கிரமே நிறைவேற்றப்படும்.

மலைப் பிரதேசத்தில் வாழும் இந்த மூன்று லட்சம் மக்களும் வீரமிக்கவர்களாம், சரித்திர வீரம் பெற்றவர்களாம்; இவர்கள் இராணுவத்தினரைப்போல் எப்போதும் துப்பாக்கிகளைக் கொண்டு செல்கின்றனராம்.

ஈரான் பிரதமர் சகேதியின் திட்டப்படி, நாட்டின் பாதுகாப்பையும் அமைதியையும் பாதுகாக்க வேண்டி இவர்கள் நிராயுதபாணியாக்கப்படுகிருர்கள்.

இந்தியாவில் சுமார் 6,966 கிராமத் தபாலாபீசுகள் பள்ளிக்கூடங்களில் நடத்தப்பட்டு வருகின்றன. பள்ளிக்கூட உபாத்தியாயர்கள் அவற்றில் போஸ்ட்-மாஸ்டர்களாகவும் வேலை பார்த்து வருகின்றனர்.

# "சமுதாய சீர்திருத்தத்தை நாம் அலட்சியப்படுத்திவிட்டோம்"!

## "நாட்டின் முன்னேற்றம் சமூக சீர்திருத்தத்திலிருக்கிறது"

### பேசுவது நாமல்ல — பண்டித நேரு

"அடிப்படையான சமுதாய சீர்திருத்தங்கள் இந்தியாவில் செய்யப்பட வேண்டுமென்பது மிக முக்கியம் என நான் நினைக்கிறேன்;

"அரசியல், பொருளாதாரம், சமுதாயம் ஆகிய மூன்றும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை; இம்மூன்று துறைப் பிரச்சினைகளையும் ஏககாலத்தில் தீர்ப்பதற்கு முனையாவிடின் ஒரு நாடு முன்னேற முடியாது."

—இவ்வாறு, பிரதமர் பண்டித நேரு மகாராஷ்டிர சமுதாய மாநாட்டிற்கு அனுப்பியுள்ள ஆசிச் செய்தி ஒன்றில் குறிப்பிட்டிருக்கிருர்.

மகாராஷ்டிர பிரதேச காங்கிரஸ் தலைவரான தியோகிநந்தன் எம்.பி., என்பவர் மூலம் அனுப்பியுள்ள அந்த ஆசிச் செய்தியில் அவர் மேலும் குறிப்பிட்டுள்ளதாவது :—

"கடந்த ஆண்டுகளில் சமுதாயச் சீர்திருத்தம் பற்றியும், குறிப்பாக தீண்டாமை ஒழிப்பு பற்றியும் நாம் கருதிவந்திருக்கிரோம். இந்து திருமணச் சீர்திருத்தங்கள் பற்றியும் மக்கள் சபையில் பேசுகிரோம். உண்மையிலேயே அத்தகு சீர்திருத்தங்கள் எல்லாம் விரிந்த அரசியல் பொருளாதாரக் கண்ணேட்டங்களுடனேயே செய்யப்பட்டன. சமுதாயத் துறையை நாம் அலட்சியப்படுத்திவிட்டோம். இன்று அடிப்படையான சமுதாய சீர்திருத்தத்திற்கு முக்கியம் தர வேண்டியது மிக அவசியமென நான் கருதுகிறேன்."

# பிரான்சின் அரசியல் - நெருக்கடி தீர்ந்தது!

## பாரிஸ் ஒப்பந்தத்தை ஒப்புக்கொண்டது

பாரிஸ், டிச. 30—

பிரெஞ்சு தேசிய சட்டசபை இன்று மேற்கு ஜெர்மனியை ஆயுதபாணியாக்கும் பாரிஸ் ஒப்பந்தத்தின் பகுதியை ஒப்புக்கொண்டது.

சில நாட்களுக்கு முன்பாக ஜெர்மனியின் ஆயுதப் புனரமைப்புக்கு எதிராக வாக்களித்த பிரெஞ்சு சட்டசபை, இன்று தனது முடிவை மாற்றிக்கொண்டு 237—260 என்று வாக்களித்து, மேற்கத்திய வல்லரசுகள் எதிர்பார்த்திருந்த 'சாதகமான முடிவு'க்கு ஒப்புதல் தந்துவிட்டது.

இந்த முடிவினுல் மெண்டே பிரான்சின் மந்திரிசபை நிலைத்துவிட்டது.

வாக்கெடுப்புக்கு முன்னர் பேசிய மெண்டே பிரான்ஸ், "நாம் பாரிஸ் ஒப்பந்தத்தை ஒப்புக்கொள்ள மறுத்தால், நேச நாடுகள் நம் முடிவையே பின்பற்றுவார்கள் என்று நினைக்கிறீர்களா?" என்று உறுப்பினர்களைப் பார்த்துக் கேட்டார்.

"பாரிஸ் ஒப்பந்தத்தை நாம் ஏற்றுக்கொண்டால் அடுத்து நடைபெற இருக்கும் நான்கு வல்லரசு மாநாட்டிலும், சோவியத் ரஷியாவின் ஒத்துழைப்பைத் தேடுவதிலும் பிரான்சுக்கு முக்கிய பங்கு இருக்கும்" என்று அவர் மேலும் கூறினர்.

பாரிஸ் ஒப்பந்தத்தின் மூலம் 15 டிவிஷன்கள் கொண்ட இராணுவப் படையையும், சிறு அளவில் கப்பற் படை ஒன்றையும், விமானப் படை ஒன்றையும் மேற்கு ஜெர்மனி வைத்துக்கொள்ள அனுமதிக்கப்படும்.

### திருமணங்கள்

6—12—54 காலை 10 மணிக்கு தாமரைக்குளம் தி. மு. கழகச் செயலாளர் செ. கந்தசாமி — தோழியர் இராமு அம்மாள் திருமணம் தோழர் ப. கு. ராமசாமி தலைமையில் நடைபெற்றபோது மணமக்களைப் பாராட்டி தோழர்கள் பி. பாண்டியன், ர. வெள்ளிச்செல்வன், ஆ. சு. பாண்டியன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். இத்திருமணத்தின் நினைவாக 'நம் நாடு'வளர்ச்சிக்கு ரூ.5 நன்கொடை அளிக்கப்பட்டது—வரப்பெற்ருேம் நன்றி—பொறுப்பாளர்.

* * *

பரமக்குடியில் தோழர் எம். ஏ. வகாப்—தோழியர் சன்னத்து அம்மையார் திருமணம் 18—12—54ல் நடைபெற்றது. இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிக்கப்பட்டது— வரப்பெற்ருேம்—நன்றி—பொறுப்பாளர்.

* * *

17—12—54 மாலை 7 மணிக்கு, தோழர் கே. என். நாகுமணி தலைமையில், 6-12-54ல் நடைபெற்ற தோழர் கே. கே மூர்த்தி—தோழியர் ருக்குமணி திருமணத்தைப் பாராட்ட நடைபெற்ற கூட்டத்தில் தம்பதிகட்கு வாழ்த்துப் பத்திரம் ஒன்று வாசித்தளிக்கப்பட்டதோடு தேனீர் விருந்தொன்றும் நடைபெற்றது. இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிக்கப்பட்டது. பெற்றுக்கொண்டோம் —நன்றி—பொறுப்பாளர்.

### பிறப்பு

பரமக்குடி தோழர் சி. வி. முத்துசாமி அவர்கள் துணைவியார் தோழியர் சௌந்தரம் அம்மையாருக்கு, 8-12-54ல் ஒரு பெண் மகவு பிறந்து, 18—12—54ல் 'பூங்கோதை' என்று பெயரிடப்பட்டது. இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 நன்கொடையளிக்கப்பட்டது. வரப்பெற்ருேம் — நன்றி — பொறுப்பாளர்.

* * *

திண்டுக்கல் தோழர் விக்கிரமாதித்த இராசன் அவர்களது துணைவியார் தோழியர் பத்மாவதி அம்மையார் 27—12—54ல் ஓர் ஆண் மகவுக்குத் தாயானர். இதன் நினைவாக 'நம் நாடு' இதழ் வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிக்கப்பட்டது—வரப்பெற்ருேம்—நன்றி—பொறுப்பாளர்.

# சவ்வரிசி உற்பத்தி

## குறைந்தபட்ச தரம் நிர்ணயிக்க உத்தரவு

விற்பனைக்காக உற்பத்தியாகும் சவ்வரிசிக்குக் குறைந்தபட்ச தரம் நிர்ணயிக்கும் வகையில், 1932-ம் வருட கலப்படத் தடுப்புச் சட்டத்தைத் திருத்தி அமைக்க சென்னை சர்க்கார் திட்டமிட்டுள்ளது.

மத்திய அரசாங்கம், எல்லா மாநில அரசாங்கங்களையும் உற்பத்திக்குக் குறைந்தபட்ச தரம் நிர்ணயிக்கிற வகையில், உணவுப் பொருள் சட்டங்களைத் திருத்தி அமைக்குமாறு கோரியிருந்தனராம்; அதையொட்டியே சென்னை அரசாங்கம், இந்தத் திருத்தத்தை மேற்கொள்ளுவதாகத் தெரிகிறது.

மேலும் அந்த சவ்வரிசியில், செயற்கை நிறமுண்டாக்கும் பொருள்களோ, வெளிநாட்டுச் சரக்குகளோ, அரிசி பளபளப்பாக இருப்பதற்கான பொருள்களோ கலப்படம் செய்யப்படக்கூடாது என்றும் அரசாங்கம் உத்திரவிட்டுள்ளது.

குறிப்பிடப்பட்டுள்ள தரத்திற்குக் குறைந்த தரமுடைய சவ்வரிசி உற்பத்தி செய்பவர்களும், விற்பவர்களும் தண்டிக்கப்படுவார்கள் என்றும் சட்டம் இருக்குமாம்.

★

### மந்திரியிடம் முறையீடு

சேலம் மாவட்ட வர்த்தக சங்கதூதுக் குழுவினர், இதற்கிடையில் சென்னை நிதியமைச்சரைச் சந்தித்து சேலத்தில் சுமார் 170 சவ்வரிசி தொழிற்சாலைகள் இருப்பதாயும், சுமார் ஒரு லட்சம் ஏக்கரில் மரவள்ளிக் கிழங்கு பயிராவதாகவும், மேற்கு வங்க அரசாங்கம் சவ்வரிசியை, 'தரக் குறைவானது' எனக் கூறி அம்மாநிலத்தில் தடுத்திருப்பதால் இத்தொழிலுக்குக் குந்தகம் விளைந்திருப்பதாகவும், இப்பிரச்சினையில் வங்க அரசாங்கத்தின் அச்சத்தைப் போக்க, இந்த சவ்வரிசியின் உண்மையான நிலையை அறிந்து சிபாரிசு செய்யும் வகையில் நிபுணர்கள் அடங்கிய ஆய்வுக் குழு ஒன்றை அரசாங்கம் நியமிக்க வேண்டுமென்றும் கோரி மனு ஒன்றைத் தந்திருக்கின்றனர் எனவும் தெரிகிறது.

★

### 'சட்டத்தைத் திருத்துக'

### காமராசரிடம் முறையீடு

சென்னை, டிச. 31—

'சவ்வரிசி என்றால் என்ன?' என்பதை நிர்ணயிக்கும் சம்பந்தப்பட்ட சட்டத்தை, சில நாட்களுக்கு முன் மத்திய அரசாங்க உணவு ஆராய்ச்சிக் குழு நிர்ணயித்துள்ளபடி, 'சவ்வரிசி என்றால் ஒரு மாவுப் பொருள்; சாகோ, மற்றும் மரவள்ளிக்கிழங்கு ஆகியவற்றின் மாவிலிருந்து தயாரிக்கப்படுவது;' என்று விரைவில் திருத்தியமைக்குமாறு, சேலம் சவ்வரிசி உற்பத்தியாளர் சங்கச் செயலாளரும் மற்றும் இதரரும் முதன் மந்திரி காமராசரை அவரது இல்லத்தில் சந்தித்து வற்புறுத்தினர் எனத் தெரிகிறது.

மலேயாவில் மரவள்ளிக்கிழங்கு உற்பத்தி முறைபற்றியும், சவ்வரிசி தயாரிப்பு முறை பற்றியும் ஆராய்ந்து அறிந்துவர, விவசாய இலாகா அதிகாரி ஒருவரை, சேலம் சவ்வரிசி உற்பத்தியாளர் சிலருடன் அனுப்புவதற்கு ஏற்பாடு செய்யுமாறும் கோரப்பட்டதாகவும் தெரிகிறது.

சேலத்தில் ஒரு சவ்வரிசி உற்பத்தி பரிசோதனை சாலையையும் நிறுவி, அங்கு சவ்வரிசி உற்பத்திக்கான புதிய முறைகளையும் புகுத்துமாறும் கேட்கப்பட்டதாம்.

இந்த யோசனைகள் குறித்து சர்க்கார் யோசிக்கும் என்றும், தன்னை சிலநாள் கழித்து சந்திக்குமாறும் முதன் மந்திரி காமராசர் கூறியதாகத் தெரிகிறது.

# குடிசைத் தொழில் வளர்ச்சிக்கு உதவி

## மத்திய ஆட்சியினர் தரும் மானியத்தின் நோக்கம்?

பலதிறப்பட்ட சிறு சிறு தொழில்கள், குடிசைத் தொழில்கள் இவற்றின் வளர்ச்சிக்காக இந்திய சர்க்கார் மேலும் மானியத் தொகைகளும், கடன் தொகைகளும் அளித்துள்ளதாம்.

ஜனவரி திங்களில் சென்னை—ஆவடியில் நடைபெறவிருக்கும் அகில இந்திய காங்கிரஸ் மாநாட்டையொட்டி, கண்காட்சி ஒன்றை நடத்த அகிலஇந்திய கதர்-கிராமக் கைத்தொழில் போர்டுக்கு ரூ. 1½ லட்சம் மானியமாக வழங்கப்பட்டிருக்கிறது.

காங்கிரஸ் மகாசபையில் கைத்தொழில் கண்காட்சி ஒன்றை நடத்துவதற்காகவும் அகில-இந்திய கைத்தொழில் போர்டுக்கு ரூ. 40,000 வழங்கப்பட்டிருக்கிறது.

பனை வெல்லத் தொழிலின் வளர்ச்சிக்காக அகில-இந்திய கதர், கிராமக் கைத்தொழில் போர்டுக்கு மானியமாக ரூ. 18,500 வழங்கப்பட்டுள்ளது.

இந்தத் தொகையிலிருந்து, 4 மத்திய சோதனை நிலையங்களின் ஆராய்ச்சிச்சாலைகளுக்கு வேண்டிய சாமான்கள் வாங்குவதற்கு ரூ. 16,000-மும் பனை வெல்லத் தொழிலில் விசேடப் பயிற்சி அளிக்க 40 உபகாரச் சம்பளங்கள் அளிப்பதற்காக மீதித் தொகையும் செலவிடப்படும் என்று தெரிகிறது.

# இந்திய சர்க்கார் புதிய இறக்குமதி கொள்கை!

## அமெரிக்க திரை படங்கள் அதிகம் வரும்!

புதுடில்லி, டிச. 31—

1955-ம் ஆண்டின் முதற் பகுதி பற்றிய இறக்குமதி கொள்கையை இந்திய சர்க்கார் வெளியிட்டிருக்கின்றனர்.

டாலர் பிரதேசத்திலிருந்து அதிக இறக்குமதிக்கு வழி செய்யப்பட்டிருக்கிறது.

இப்புதிய இறக்குமதிக் கொள்கையின்படி ரேசர் பிளேடுகள் இறக்குமதி அதிகரிக்கப்படுகிறது.

அமெரிக்காவிலிருந்து சிகரெட்டுகள் முதலியன அதிகம் இறக்குமதி செய்யப்படும்.

பெனிசிலின், ஸ்டெப்ரோமைசின் போன்ற மருந்துகள், மோட்டார் உறுப்புகள் ஆகியவற்றின் இறக்குமதி குறைக்கப்படுகிறது.

பிளாஸ்டிக் லேட்டுகள், கண்ணாடித் தகடுகள் போன்ற நாட்டில் குறைவாகக் கிடைக்கும் சாமான்கள் சிலவற்றின் இறக்குமதி கோட்டா அதிகப்படுத்தப்படும்.

கச்சாபட்டு, சோடியம் பைகார்பனேட், காஸ்டிக் சோடா, சோடா ஆஷ் போன்றவைகளில் இறக்குமதியைக் குறைத்தால் உள்நாட்டு விலை ஏறுவதாகவும், ஏராளமாக இறக்குமதி செய்ய அனுமதித்தால் உள்நாட்டுத் தொழில் பாதிக்கப்படுவதாகவும் தெரிவதால், பட்டு இறக்குமதிக்குக் குழு அமைத்திருப்பதுபோல் மேற்கண்ட பொருள்களுக்கும் தனி ஏற்பாடுகள் செய்யப்படுமென்று தெரிகிறது.

# சதி அம்பலமாகிறது

## முன்னாள் அமைச்சர் அப்ரூவர்

ரங்கூன்—

பர்மா சர்க்காரைக் கவிழ்க்க சதித் திட்டம் செய்த மூன்று முன்னாள் அமைச்சர்களில் ஒருவரான ஊ-பா, அச்சதித் திட்டம் பற்றிய விவரங்களையெல்லாம் விவரமாக ஒரு மாஜிஸ்திரேட்டிடம் தெரிவித்து தானும் 'அப்ரூவரா'க மாறிவிட்டிருக்கிறார். தற்போது அம்மூவரும் சிறையில் வைக்கப்பட்டிருக்கின்றனர்.

# எம். ஆர். இராதா விடுதலை

சென்னை, ஜன. 1—

சென்ற ஆண்டு டிசம்பர் 18-ந் தேதியன்று இ. பு. கோ. 151-வது பிரிவின்படி கைது செய்யப்பட்டு, திருச்சி மத்திய சிறையில் காவலில் வைக்கப்பட்டிருந்த தோழர் எம். ஆர். இராதா நேற்று விடுதலை செய்யப்பட்டார்.

### சென்னை 10-வதுவட்ட தி.மு.க. செயற் குழு உறுப்பினர்கட்கு

2-1-55 மாலை 6 மணிக்கு, சென்னை, எண் 83, தையப்ப முதலி தெருவில், சென்னை 10-வது வட்ட தி. மு. கழகச் செயற் குழுக் கூட்டம் நடைபெறும். அதுசமயம் திராவிடர் திருநாள் கொண்டாடுவதுபற்றி ஆராயப்படும்.

### திருவள்ளுவர் இளைஞர் கழகம்

2-1-55 காலை 10 மணிக்கு, சென்னை, மண்ணடி, எண் 94-95, புதுத் தெரு, இராசமன்னார் பாடசாலையில், திருக்குறள் வகுப்பு நடைபெறும். தோழர் சி. முருகேசனார் விளக்கவுரையாற்றுவார்.

### சொற் பயிற்சிக் கூட்டம்

2-1-55 காலை 10 மணிக்கு, சென்னை 14-வது வட்டம் அழகிரி மன்றத்தில், தோழர் கே. எம். கண்ணபிரான் தலைமையில் 'மக்களாட்சி' என்னும் பொருள் பற்றி தோழர்கள் பலர் பேசுவர்.

* * *

2-1-55 மாலை 9 மணிக்கு, சென்னை 44-வது வட்ட தி. மு. க. பணிமனையில் (எண் 2, அரங்கநாதபுரம் தெரு) தோழர் எம். இராசு தலைமையில் 'பண்டையக் கலை' என்பது பற்றி பலர் பேசுவர்.

### தாய்மார் கழகம்

4-1-55 பிற்பகல் 2-30 மணிக்கு, சென்னை முத்துகிருஷ்ணன் தெரு, 15-ம் எண்ணுள்ள இல்லத்தில் நடைபெறும் திருக்குறள் வகுப்பில் 'பயனில சொல்லாமை' என்பது குறித்து, தோழர் மயிலை சிவமுத்து, தோழியர்கள் சுசிலா, ஜெயகுமாரி, ஜெகதீஸ்வரி ஆகியோர் பேசுவர்.

### அகில இந்திய சமாதான ஆசிய ஒற்றுமை மாநாடு

2-1-55 மாலை 5 மணிக்கு, சென்னை, திருவல்லிக்கேணி கடற்கரையில், மாபெரும் பொதுக்கூட்டம் டாக்டர் கிச்சலு தலைமையில் நடைபெறும். தோழர்கள் லாபீபட், சுவாமி சத்யானந்த பாரதியார், பண்டிட் சுந்தர்லால், டாக்டர் ஜே. சி. குமரப்பா, புரொபஸர் கோசாம்பி, ஏ. கே. கோபாலன், ராமமூர்த்தி, ரொமேஷ் சந்திரா, முல்க்ராஜ் ஆனந்த், பால்ராஜ் சஹானி, தோழியர்கள் பிரிட், ஆண்ட்ரீன், மற்றும் பலர் பேசுவர். சீன கலாசார தூதுகோஷ்டியினரும் கலந்துகொள்வர். பொதுக் கூட்டத்தையொட்டி, மாபெரும் ஊர்வலம் பிற்பகல் 2 மணிக்கு, சென்னை, செயிண்ட் மேரீஸ் மண்டபத்திலிருந்து புறப்படும்.

# மதுவிலக்கு அமுல்

## மாநிலம் முழுமையும் போலீசார் வசம் ஒப்படைக்கப்படும்

சென்னை, டிச. 31—

மதுவிலக்கை அமுல் நடத்தும் பொறுப்பை சென்னை மாநிலம் முழுவதிலும்உள்ள போலீசாரிடம் ஒப்படைக்கப்படும் என்று தெரிகிறது.

ஏற்கனவே எட்டு மாவட்டங்களில் போலீசார் பொறுப்பேற்றுள்ளனர். ஜனவரி 3-ம் நாளிலிருந்து மற்ற ஐந்து மாவட்டங்களிலும் மதுவிலக்கை அமுல் செய்யும் பொறுப்பு போலீசாரிடம் ஒப்படைக்கப்படும். உதவி போலீஸ் இன்ஸ்பெக்டர் - ஜெனரல் ப. எல். பர்ரல் இந்த இலாகாவின் தலைமை அதிகாரியாக இருப்பார் என்று தெரிகிறது.

சர்க்கார் மதுவிலக்கு இலாகாவில் உள்ள சிப்பந்திகள் இத்திட்டத்தினால் பாதிக்கப்படமாட்டார்கள் என்று தெரிகிறது.

# 'யுத்தம் முடிந்து விட்டது; நாட்டிற்கு வாருங்கள்'

## காட்டில் மறைந்து திரியும் துருப்புகளுக்கு அழைப்பு!

டோக்கியோ, ஜன. 1—

நியூகினியாவின் காடுகளில் ஒளிந்து கொண்டிருப்பதாகக் கருதப்படுகிற நூற்றுக்கணக்கான ஜப்பானிய யுத்த வீரர்களுக்கு, "யுத்தம் முடிந்து 10 ஆண்டுகள் ஆகிவிட்டன; நாடு திரும்புங்கள்," என்று அறிவிப்பதற்காக விமான மூலம் பிரசுரங்களை அந்தக் காடுகளில் வீசியெறியத் திட்டமிடப்படுவதாகத் தெரிகிறது.

ஜனவரி 12-ந் தேதி முதல் சர்க்கார் அதிகாரிகளும், ஜப்பான் இளைஞர்களும், மறைந்துகொண்டிருக்கும் யுத்த வீரர்களை நாட்டிற்குத் திரும்ப அழைத்துக்கொள்வதற்கான இத்திட்டத்தில் ஈடுபடுவராம்.

இந்த நியூகினியக் காடுகளில் சுமார் 2,000 ஜப்பானியத் துருப்புக்கள் மறைந்திருக்கக்கூடும் எனத் தெரிகிறது.

# அறப் போராட்டத்தில் உயிர்நீத்த தோழர்கட்கு உதவி நிதி

கல்லக்குடி, தூத்துக்குடி அறப் போராட்டத்தில் உயிர்நீத்த தோழர்கள் குடும்பத்திற்கு உதவி நிதி அளிக்க பொதுச் செயலாளர் அண்ணாதுரை அவர்களிடம் கீழ்க்கண்ட ஊர்களில் தோழர்கள் அளித்த நிதித் தொகை விவரம் வருமாறு:—

| | ரூ. அ. பை. |
|---|---|
| 22—12—54-ல், லெப்பைக்குடிக்காடு பொதுக் கூட்டத்தில், திருச்சி மாவட்டம் சன்னாசி நல்லூர் தி. மு. கழகத் தோழர் எம். கிருஷ்ணசாமி அவர்கள் கொடுத்தது | 50— 0—0 |
| 24—12—54-ல், சின்னாளப்பட்டியில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் கொடுத்தது:— | |
| கீழக்கோட்டை தி. மு. கழகத் தோழர்கள் சார்பில் | 10— 0—0 |
| தோழர் எம். செல்லம் மூலம் வசூல் | 6—10—3 |
| சின்னாளப்பட்டி தங்கம் - வெள்ளி தொழிலாளர்கள் சார்பில் (201 காலணா) | 3— 2—3 |
| பெருமாள் கோவில்பட்டி தி. மு. கழக தோழர்கள் சார்பில் (101 காலணா கொண்ட முடிப்பு) | 1— 9—3 |
| தோழர் ராசப்பன் அவர்களால் | 0— 8—3 |
| சின்னாளப்பட்டி பெண்மக்கள் சார்பில் ஒரு முடிப்பும், விவரமில்லாமல் ஒரு முடிப்பும் ஆக | 7—13—3 |
| 25—12—54-ல், திண்டுக்கல்லில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் தி. மு. கழக தோழர்கள் இருவர் கொடுத்த இரு முடிப்புகள் மூலம் | 4— 0—3 |
| 27—12—54-ல், திருச்சி மாவட்டம் கோவாண்டகுறிச்சியில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர் இரா. நெடுஞ்செழியன் மூலம் வரவு | 3— 2—3 |
| ஆக மொத்தம் ரூ. | 86—13—9 |

[இந்த ரூ. 86—13—9-ம் பெற்று, கணக்கில் வரவு வைத்துக் கொண்டோம்—பொறுப்பாளர்.]

# ஆவடி மாநாடுகள்:

## சர்க்கார் விசேஷ பஸ் ஏற்பாடு

சென்னை—ஆவடியில், இத்திங்களில் நடைபெறவிருக்கின்ற அகில இந்திய காங்கிரஸ் மாநாட்டையொட்டி, நகரிலிருந்து ஆவடிக்குப் போக 250 பஸ்கள் விடுவதென சென்னை சர்க்கார் முடிவு செய்துள்ளது.

பஸ் கட்டணம் அணா 8 என்றும் நிர்ணயிக்கப்பட்டுள்ளதாம்.

### பர்மா—ஷெல் சிப்பந்திகள்

### நிர்வாகத்துடன் மூன்றாண்டு ஒப்பந்தம்

சென்னை, டிச. 31—

சென்னை பர்மா-ஷெல் சிப்பந்திகள் கழகத்தினரும், பர்மா-ஷெல் நிர்வாகத்தினரும் இன்று உதவித் தொழில் கமிஷனர் முன்பு மூன்றாண்டு கால ஒப்பந்தம் ஒன்றில் கையெழுத்திட்டனர்.

இதன் மூலம் 2,000 பேர் பயன் அடைவர் என்று தெரிகிறது.

ஜனவரி முதல் நாள் முதல் இந்த ஒப்பந்தம் அமுலுக்கு வருகிறது.

1953—54-ம் ஆண்டுகளுக்கு எல்லோரும் நான்கு மாத போனஸ் பெறுவர் என்று தெரிகிறது.

கிளார்க்குகள் ரூ. 5 சம்பள உயர்வு பெறுகிறார்கள்; பஞ்சப்படியிலும் ரூ. 5 அதிகம் பெறுவார்கள்; 'ஸ்டெனோகிராபர்'கள் ரூ. 15 அதிகச் சம்பளம் பெறுவர்; 'டிராப்ட்ஸ்மென்'கள் ரூ. 30 சம்பள உயர்வு பெறுகின்றனர்.

மற்றும் இதர பிரச்சினைகளிலும் முடிவு ஏற்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

### பொன்மலை திருக்குறள் கழகம்

19—12—54 மாலை 6-30 மணிக்கு நடைபெற்ற மேற்படி கழக 8-வது திங்கள் விழாவின் போது, திரு கந்தசாமி 'வாழ்க்கை நூல்' என்னும் பொருள்பற்றி விளக்கவுரையாற்றினார். பின்னர், தோழியர் மனோரஞ்சிதம் இயற்கையெய்தியமைக்கு அனுதாபம் தெரிவித்துக் கொள்ளப்பட்டது.

# சமாதான மாநாடு: கலை விழா நிகழ்ச்சி

சென்னை, ஜன. 1—

சென்னையில் நடைபெறும் சமாதான மாநாட்டினை ஒட்டி கலை நிகழ்ச்சிகள் அடங்கிய விழா ஒன்று நேற்றிரவு திருவல்லிக்கேணி கலாமண்டபத்தில் நடைபெற்றது. கோபிநாத் குழுவினர், குமாரிகள் கிரிஜா, சாந்தா ஆகியோர் நடனமும். என். எஸ். கிருஷ்ணன் குழுவினர் நடித்த 'நான்கு பேர்,' எம். ஜி. இராமச்சந்திரன் குழுவினர் நடித்த 'அசோகன்' ஆகிய சிறு நாடகங்களும் நடைபெற்றன.

என். எஸ். கே. அவர்களின் 'நான்கு பேர்' நாடகம் மக்களால் பெரிதும் ரசிக்கப்பட்டது.

இவ்விழாவில், சீனக் கலைஞர் குழுவினரும், சமாதான மாநாட்டிற்காக வந்துள்ள பிரிட்டன், ஆஸ்திரேலியா, சுவீடன், இலங்கை ஆகிய நாடுகளின் பிரதிநிதிகளும் கலந்துகொண்டனர். அவர்கள் அனைவரையும் என். எஸ். கிருஷ்ணன் வரவேற்றார். டாக்டர் கிச்சுலு, கலைவிழாவில் பங்கேற்ற அனைவரையும் பாராட்டினார். அவர்களுக்கு ஏராளமான பரிசுகள் அளிக்கப்பட்டன. சீனக் கலைஞர்கள் இந்திய—சீன ஒற்றுமை பற்றிய பாட்டு ஒன்றைப் பாடினர். (ந.-நி.)

### தென் இந்திய முஸ்லிம் கல்விக் கழகம்

### பொன் விழா கொண்டாட்டம்

சென்னை, ஜன. 1—

தென்னிந்திய முஸ்லிம் கல்விக் கழகத்தின் (50-வது ஆண்டு விழா) பொன் விழாக்கொண்டாட்டம் 1955 பிப்ரவரி 5-ந் தேதி முதல் 8-ந் தேதிவரை நான்கு நாட்கள் சிறப்புற நடைபெறும் என்றும், அந்த விழாவில் அகில இந்திய முஸ்லிம் கல்வி மாநாடு, உருது மாநாடு, முஸ்லிம் கவிஞர் தினம், தமிழ் முஸ்லிம் கவிஞர் தினம் இவையெல்லாம் இடம் பெறுமென்றும் பொன் விழாக் குழுச் செயலாளர் தோழர் எம். எஸ். ஏ. மஜீத் அறிவிக்கிறார்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: சி. என். அண்ணாதுரை, எம். ஏ.,

